ஆகவே இங்கு சுக்ரபதத்தினால் ஆனிமாதம் ஸூசிதம். ப்ரஸ்துதார்த்தம் கேளீர். மஹாபலியஜ்ஞத்தில் குறட்பிரமசாரியான திருமால் சென்று "என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் மன்னா! தருக வென்றிரந்தபோது அவனும் தரத் தொடங்குகையில் "தக்கதிதன்றென்று தானம் விலக்கிய சுக்கிரன்" என்று பெரியாழ்வார் அருளிச் செய்தபடி அஸுர குருவான சுக்கிரன்வந்து தானத்தை விலக்கிக் கண்ணிழந்தொழிந்தான் என்று கதையுள்ளது. இந்த மஹாயஜ்ஞத்தில் ஒவ்வொருவரும் கொடுக்க முற்பட்டனரேயொழிய தானம் விலக்கினாரொருவருமிலர்.

[ஸிதேதரஸ்ருக்ஷாம் ஸிப:] இதில் க்ருஷ்ணபக்ஷம் ஸூசிதமாகிறது. ஸிதம்-சுக்லம்; ததிதரம்—க்ருஷ்ணம். ப்ரஸ்துதார்த்தம் கேளீர்; ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் "ந சலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே...ஸிதமநஸம் தம் அவேஹி விஷ்ணுபக்தம்" என்றும், திருப்பல்லாண்டில் "எல்லை வெள்ளுயிராக்க வல்ல" என்றும் கூறியபடி சுத்தமநஸ்கர்களன்றிக்கே தீயபுந்தியராயுள்ளவர்களுக்கு இந்த மஹாயஜ்ஞம் சத்துருவாயிருக்கும். அன்னவர்களை அருகே நாடவொட்டாமல் துரத்திவிடும், தொலைத்தும்விடும் என்கை.



[ஸததர்சநீய: க்ரது:] இன்று அமாவாஸ்யை தர்சபதத்தினால் அது ஸூசிதமாயிற்று. 'இந்த மஹாயஜ்ஞம் இங்ஙனே வருஷந்தோறும் நடைபெறாதா?' என்றே ஒவ்வொருவர் வாக்கிலும் வந்ததனால் ஸததர்சநீயமான க்ரதுவிது.

[யதீந்த்ரபரித:] இன்று திருவாதிரை யாதலால் அது இதில் ஸூசிதம். யதீந்த்ர பம்—பவர்க்க சதுர்த்தமான (பம்) என்பது "நக்ஷத்ரம் ருக்ஷம் பம் தாரா" என்ற அமரகோசத்தின்படி நக்ஷத்ரவாசகம்., யதீந்த்ரருடைய பம் திருவாதிரை. ப்ரஸ்துதார்த்த மென்னென்னில்; பன்னிரண்டு யதிச்ரேஷ்டர்கள் நிறைந்திருக்கப்பெற்றது இந்த க்ரது. திருமலை திருப்பதி ஜீயர்ஸ்வாமிகளிருவர்; ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி; காஞ்சி அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி; ஸ்ரீ பெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமி. ஆந்திரதேசத்து யதிகள் இருவர். ஸ்ரீரங்கத்திலிருந்தும் காசியிலிருந்தும் வந்திருந்த ஔத்தராஹயதிகள் நால்வர். சிகரமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ யதிராஜர். ஆகவே யதீந்த்ரபரித: க்ரது:.

[அப்ஜத்ருக்வ்ருஷபதேர் முதே கல்பதே.] அன்று திங்கட்கிழமையென்பதற்கு ஸூசகம் இது. "அப்ஜோ ஜைவாத்ருகஸ் ஸோம:" என்கிற அமரகோசத்தின்படி அப்ஜபதம் சந்த்ரவாசகம். ப்ரஸ்துதார்த்தமோ வென்னில், அப்ஜத்ருக்—செந்தாமரைக்கண்ணனான, வ்ருஷபதே: — திருவேங்கடமுடையானுடைய, முதே—திருவுள்ளவுகப்புக்கு, கல்பதே—உரித்தாயிருக்கின்றது இந்த வேள்வி. கல்பதே, கல்பதாம், அகல்பத என்று மூன்றுபடியாகவும் படிக்கலாம். திருவேங்கடமுடையானுக்குத் திருமங்கையாழ்வார் நான்கு பதிகங்கள் பாடினர். அவற்றுள் முதற்பாசுரத்தில் "கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த......தாமரைக்கண்ணினன்" என்கையாலே அதனை நோக்கியது இங்கு (அப்ஜத்ருக்) என்கிற ஸ்ரீவேங்கடேச பகவத் விசேஷணம்.



இந்த ச்லோகம் சாத்துமுறையன்று கோஷ்டியில் உபந்யஸிக்கப்பட்டது.

—: திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம் :—